ஓம்

தத் சத்

ஸ்ரீ ரமண சற்குருவே நம:

# ஸ்ரீ ரமண தோத்திர மஞ்சரி.



இஃது.

திருவண்ணாமலையின்கண்

சற்குரு மூர்த்தமா யெழுந்தருளி யிருக்கும்

**ஸ்ரீ ரமணமஹரிஷியவர்களின்,**

திருவடித் தொழும்பருளொருவரான

ஆனாங்கூர்,

அ. நடேசமுதலியாரவர்களால்

இயற்றப்பட்டு,





அனந்தபுரம்,

க. அ. இராமசாமி செட்டியாரவர்களால்,

விழுப்புரம் ஹநுமான் அச்சியந்திரசாலையில்,

பதிப்பிக்கப்பட்டது.

இரண்டாம் பதிப்பு.

1925.

## அவையடக்கம்.

---

### நேரிசை வெண்பா.

---

*முற்றும் பயின்றிறைவன் முதருள்சான் மேலவர்முன்*
*சற்றுமிலன் சற்குருசொற் சாற்றுவதுங்— கற்றவர்கோ*
*மின்மணிபூண் மான்முன் விறகுசிர சற்குமுனு*
*டன்னினமாக் கையீந்த தால்.*

ஓம்

ஸ்ரீ ரமண சற்குருவே நம:

# ஸ்ரீ ரமண ஸ்தோத்திர மஞ்சரி.

---

## முகவுரை.

"உடம்பினைப் பெற்ற பயனாவ தெல்லா
உடம்பினு ளுத்தமனைக் காண்" — என்ற நம் மூதா பிராட்டியாரின் திருவாக்கிய ரீதியாய், மிக்க மேன்மையுற்ற மனித வருக்கத்தில் வந்தோரெவரும் எம்முயற்சியினாலேனும் இப்பிறவியிலேயே, ஆன்ம சாட்சாத்காரமடைதல் தகுதி யென்பதும், அது ஈசுவரானுக்கிரகத்தினாலெய்தும் குருகடாட்ச மொன்றினாலேயே கூடுமென்பதும், இவர்கள் பக்குவமுற்ற காலத்து ஸ்ரீமத் சச்சிதானந்த பரப்பிரம்ம வத்துவே கருணையின் மிகையால் ஸ்ரீ மௌன ஞான தேசிக வடிவடைந்தருளுமென்பதும் மேலவர் பலருமுணர்ந்த விடயமாம்.

ஸ்ரீ சற்குருவின் திருவருளடைதற்கான மார்க்கங்கள் பலவற்றுள்ளும் ஆரியனின் திருவடி கமலங்களிற் சுத்த மனத்துடன் பாமாலைகளைச் சூட்டுவது மிக வெளிதாம். இவ்வகையிலேற்பட்ட நூற்களில் இஃதொன்றாம்.

இந்நூல் குருஸ்தோத்திர ரூபமாக விருப்பினும் வேதசாரமான அரிய விஷயங்கள்பல இதிலடங்கியிருத்தலாலும், பாக்கள் இனிய செந்தமிழாலும் எளிய நடையிலும் அமையப்பெற்றிருத்தலாலும், இதைக்கண்ட வெனக்குதித்த பெருமகிழ்ச்சியாலும், ஸ்ரீ மகரிஷிகளின் பக்தர்களில் யானுமொருவனானதாலும் இந்நூல் பக்தர்களெவருக்கும் பயனாமாறு யானிதை அச்சிற்பதித்து வெளிப்படுத்தினேனென்பது உண்மை.

கருணையங்கடலான [illegible]ன் ஸ்ரீ ரமண மகரிஷிகளின் சரிதம் நூலாசிரியராலேயே சுருக்கமாக நூலாரம்பத்திற் கூறப்பட்டிருத்தலால் இங்குரைப்பது மிகையாம்.

இந்நூலில்வருங் கீர்த்தனைகள் சென்னையிலிருந்த வீணை இராகவய்யாவின் திருக்குமாரரும் தற்போது திருப்பாதிரிப்புலியூரைச்சேர்ந்த புதுப்பாளையத்தில் வசிப்பவருமான வீணை வித்வான் ஸ்ரீமத் வெங்கடவரதய்யா அவர்களாற் பார்வையிடப்பெற்றவை.

1924-ம் வருஷத்தில் என்னால் பிரசுரம் செய்யப்பட்ட இதன் முதற் பதிப்பின் பிரதிகள் வெகு சீக்கிரத்திலேயே செலவாகிவிட்டமைகண்ட பலரின் வேண்டுகோளின்மேல் இவ்விரண்டாம்பதிப்புப் பிரதிகள் அச்சிபற்றப்பட்டன.

அனந்தபுரம்<br>
1-6-25.

இங்ஙனம்,<br>
அடியார்க்கடியேன்<br>
K. A. Ramaswamy.



உ

ஸ்ரீ ரமண சற்குருவே நம:

# சிறப்புப்பாயிரம்.

---

## பிரமபீடம்.

சம்பக்கிரி ஸ்ரீமத் அச்சுதாநந்த சுவாமிகள் மரபிற்குரிய சதனபுரி
ஸ்ரீமத் இராமச்சந்திர குரு சுவாமிகளின் மாணவர் குளப்பாக்கம்
ஸ்ரீமத் ஆ. கேசவலு நாயுடு அவர்களியற்றிய

### ஆசிரியப்பா.

உலகெலா முதவியு மோம்பியு மொடுக்கியு
மலகிலா வனைத்துயிர்க் ககம்புற மாகியு
மறிவதற் காகா வருவமா யாய்ந்துயர்
பொறிவழிக் கடங்கிப் புவியுள பற்பல
சமயமெய் திடுபல சகளரூ பங்களா
யமையநின் றாதியு மந்தமு மில்லா
வொருபெரும் பொருளா யொளிருமெய்ச் சோதி
யருளொடு மன்புமிக் கணைந்துயி ருய்வதற்
கிரங்கியோ ராறறி வெய்தியு மம்மவோ!
திரங்கரு திலரெனத் திருவுளங் கசிந்தங்
குள்ளிருந் தூற்றெடுத் தொழுகுநற் கருணையால்
வள்ளிருட் கானடர் மன்பதை திருத்துவான்
றானினைந் ததற்கோர் தகுவழி யாதென
மானினைக் காட்டி மான்பிடிப் பதுபோல்
விசாதி யாமொளி விடுமுருக் கரந்து
சசாதி யாய்தருஞ் சட்டையைப் போர்ந்து
மனிதப் பிறவியை மன்னியிம் மண்ணிடை
யினிதுவந் தெவர்க்கு மிதஞ்செய வெண்ணுமத்
தண்ணருட் பிழம்பாற் றருமூர்த் தங்களுள்

வண்ணமால் வடிவமாய் வருமரு ணாசல
னகந்தொரு கிதையா னுணர்வினை யுதவியாங்
‘‘குகந்தொறு முகிழ்த்திய் வலகினைத் திருத்துவ’’
னென்றசொற் படிவரு மிருடியர் பலருளே
யன்றான் சங்கர வாரிய னும்மெய்ஞ்
ஞானநீர் பொழிந்து நனைத்தநல் லீர
மூனவன் கலிவெயி லுருப்பினு லுலர்ந்தநா
லன்றவன் வளர்த்தநம் மறிவெறு மைபங்கூ
ழின்றுமிக் குலர்ந்திடு கெய்த்ததை யுணர்ந்தே
முந்தவந் தொளிர்நவம் முக்கணற் கொருபொருள்
தந்தருட் சிவகுரு சண்முக னிங்ஙனம்
வேண்டிய வேண்டியாங் கெய்துபு விளங்கும்
பாண்டிய நாட்டிடைப் பல்வளஞ் செறிந்த
திருச்சுழிப் பதியினிற் றெளிந்துபற் பிறவியிற்
கருச்சுழிக் குட்படாக் கனநோன் புஞற்றிய
சுந்தரத் தையருந் துணையழ கம்மையும்
தந்ததோர் மகவாய்த் தனித்தொரு வணங்கிலி
ரமணனாய்த் தோன்றிய ரமணமா தவர்க்கிறை
யமனை யழிக்கமுன் னுநடைப் பிள்ளையாய்
வந்திபத் கடையுபா யத்தினை மறந்தே
யிந்நாட் பொறுமையு மிரக்கமு மேற்று
குன்றுதோ ராடுநங் குமாரன் பிறப்பிற்
றுன்றுமுன் றுவதாய்த் துலங்கியவ் வெப்பவா
வகவொளி தனின்வினை யகடிடுங் குரிசி
லகப்புறா ளி வடிவமா மருணையங் கிரியை
நண்ணிமெய்த் தவமுயர் நாட்டமே பெரிதா
யுண்ணிலை நின்றன னுணர்வினா யகனுப்
‘‘உரனெனுந் தோட்டியா னோரைந் தளிப்பான்
வரனெனும் வைப்புக் கோர்விதை’’ யெனும்வள
மடக்கவேண் டுவவெலா மடக்கியு மதன்பின்
கிடைக்கவேண் டுவவெலாங் கிடைக்கப் பெற்றநா
‘‘லிருமை வகைதெரிந் தீண்டறம் புரிந்தார்
பெருமை பிறங்கினப் பேருல’’ கெனத்திகழ்ந்
தருள்பழுத் துயரு மற்புதத் தருவா
யிருள்பகைத் தெழுமோ ரிமையநற் குன்றமாய்
மறைமுடி விளக்காய் மன்னுயிர்க் குயிராய்
நறைமுடிந் தவிழு ஞானநன் மலரா
யாசையற் றவனென வவிர்ந்துமிக் கிளர்ந்த
காசினி மேற்கரார் கடந்தபே ரன்பாய்

றேன்பொழி வாயினுற் றெருட்பொழிந் தமித்தையாங்
கூஞ்பொதி யுலகுயக் குளிர்பொழிக் கொண்டலா
யடுத்தவர் தம்மை யளிக்குமோர் தாயாய்த்
தடுத்தறி வாதிநி தருமொரு தந்தையா
யடர்பிறப் பறுங்கலை யருந்துமெய்க் குரவனு
மிடர்கெடுத் திரண்டற வேற்குநற் றெய்வமாய்த்
தன்னடி தழீஇத் தாக்கிருட் படாஅர்
நன்னல மறூஉம் நாட்டமும் விடாஅம்
மாசொரு சிறிதுமில் மாதவப் பெரியனை
யாசகன் றமர்ந்தரு ளறிவினுக் கண்ணலை
"பாசநோ யகலுநற் பதந்தரு வதில்வரைத்
தேசவிர் தெய்வந் தன்னினுந் தேசிகன்
மிக்கோ" னெனப்பகர் மேலவர் மொழிவழி
நக்கோ னிவனெனத் தான்றெரிந் தடைந்து
பண்ணிய தொழும்பிற் பற்றியப் பயனென
நண்ணிய விசைபயில் நாவலி தோய்ந்து
திருப்புகழ் கீர்த்தனந் தெளிந்தநே ரிசையுட
னொருப்படு மாலையு முவமையி லின்னணந்
தருணமா மலர்பல தான்றொடுத் திட்டதோ
ரருணையி ரமண வாரியன் றேத்திர
மஞ்சரி யினையம் மாண்புறு தேசிகன்
றன்சர ணங்களிற் சாத்திமெய்த் தொண்டி
னுன்னரு முரிமையை யுணர்ந்திமிக் குய்ந்தன
னன்னவ னியாரெனி லறைகுதுங் கேண்மோ!
லூத்தை யுடற்றலை யொட்டப் பாடிய
கூத்த னுதித்தசெங் குந்தர்தம் மரபிற்
பானான் குணர்ந்தவர் பதிந்துவாழ் வுற்றதோர்
ஆறுங் கூர்வரும் அப்பா சாமியின்
நற்றவத் தாலிந் நானிலந் தோன்றி
கற்றவர் விரும்புங் கல்வியு மொழுக்கமுந்
தூய்மையோ டின்பந் துடர்குரு பத்தியும்
வாய்மையு மெய்ந்நியில் வையகத் துற்ற
மாந்தர்க ளேவரு மதிக்குநற் பண்புஞ்
சாந்தமும் பெறுநடே சப்புல வோனே

---

### அறுசீர் விருத்தம்.

நீண்டநா டொடங்கியொரு தமிழ்மாலையணிவிருப்ப
நிலைத்து றக்க
மூண்டநா யேன்றனை தேசகவி ஞானயேவி
முயன்றன் னேனே
யாண்டநா யகனிரம ணநந்த வள்ளலரு
ளார்வ மென்னே!
வேண்டனுன் புனைநூற்கென் சிறப்புப்பா யிரம்புகல
விரும்பிற் றன்றே.

---

### சாற்றுக்கவிகள்.

இலக்கண இலக்கிய வேதாந்த தர்க்க போதகாசிரியர்

மஹாவித்வான்

## சென்னை ஸ்ரீமத் கோ. வடிவேலு செட்டியாரவர்கள்

இயற்றிய

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

அந்தணருஞ் சான்றோரு மருந்தவத்தைச் செய்வோரு
மன்புட் கொண்டு
பந்தநிலை தொலையும்வணம் வாழருணைக் கிரிமேவி
பக்தர் போற்றச்
சிந்தைநிலை திரியாது திகழ்ரமண முனிமீது
தேனு றுங்கூர்
சுந்தரதே சப்புலவன் ரமணதோத் திரமியற்றி
வாம்பெற் றுனே.

---

திருவருணையின்கண் சற்குருமூர்த்தமாய்த் திகழும்
ஸ்ரீ ரமண மகரிஷியவர்களின் திருவருள் பெற்றுருவொருவரும்
வேதாந்த வித்வ சிரோமணியுமான

## சென்னை ஸ்ரீமத் பாரத்வாஜி முகவைக்கண்ண முருகனவர்கள் இயற்றிய

### வெண்பா.

ஆர்வமிகு மன்பா லருணாம ணேசன்றன்
சோர்வகலுஞ் சொற்பொருள்சேர் தோத்திரத்தின்—சார்பாகச்
சாற்றுக் கவிகள்சில சாற்றுவே னெல்லோரும்
போற்றுங் குருவருளைப் பூண்டு. 1.

பொன்னு ருவந்துறைதோட் பூமான் சிறந்தவிளை
மின்னார் வழிபடவே வீற்றிருந்—தன்னார்
மனந்தடுமா றுமே மதிமயக்கந் தீர்க்கு
மனந்தபுரத் தாசா னவன் 2.

சித்தரெலா மெச்சுந் திருவேங் கடரமணக்
கத்தனது மேலுள்ள காதலாற்—புத்தமுதாய்
நாத்தொலைவில் லாவந் நடேசவுயர் நாமனிசைக்
கீர்த்தனைகள் செய்தான் கிளந்து 3.

பேசற்கு வாராத பேரன்பாய்த் தற்சேர்ந்த
நேசர்க் கியாவையுமே நேர்ந்தரம—ணேசர்க்குப்
பூமாலை வேய்தல் புகழன் றெனக்கருதிப்
பாமாலை வேய்ந்தான் பரிந்து 4.

மன்பதைக ளாலே மதித்தற் கரியபே
ரின்பவடி வானரம ணேசன்மே—லன்பாகிப்
பூவாரம் போலப் புலராது பைந்தமிழாற்
றேவாரம் பாடினான் றேர்ந்து. 5.

பத்திமையா லுற்றார் பழிபாவந் தீர்க்கருளு
முத்தரம ணாநந்த மூர்த்தியின்மேல்—மெத்த
விருப்புடனே யோதுவார் வெவ்வினைகள் போக்குந்
திருப்புகழ்தான் சாற்றினான் றேர்ந்து. 6.

தோத்திரங்க ளித்தனாயுந் தாபரம ணேசன்மேற்
சாத்திநடே சன்பணிந்த தன்மைபோற்—சோத்தமொடு
சிந்தித்துப் பாடுவார் சீர்பெறவே மாந்தரெலாம்
வந்திக்க நீடுவாழ் வார். 7.

---

திருக்கோவலூர்

போர்டு ஹைஸ்கூல் தலைமைத் தமிழ்ப்பண்டிதர்

ஸ்ரீமத் தி. வடிவேலுமுதலியாரவர்களியற்றிய

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

இகபர வாழ்விற் குறுதுணை யிறைவன்
றெவர்களுங் கண்டுகண் டுய்ய
சகசநிட் டையினிற் றனித்தினி திருக்குஞ்
சற்குரு ரமணதே சிகர்மே
லகமிக வுருகி யன்பர்கள் துதிக்க
வரியதோத் திரமதொன் றமைத்தான்
தகைமைசேர் புவியிற் பக்தியே யுருவாய்த்
தழைத்திடு நடேசநா வலனே

---

இந்திரபீடம்.

ஸ்ரீமத் சச்சிதானந்த சுவாமிகளின் மாணவர்

திருவொற்றியூர்

ஸ்ரீமத். ஆறுமுகமுதலியாரவர்களியற்றிய

எழுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

திருவரு ணெறியிற் சேர்பவர் தமக்குத்
திருவணு மலையென விளங்கு
மொருபெருங் கடவுள் தன்னிடத் திருந்து
வோவருஞ் சகசநிட் டையனுப்
பொருவற விளங்கும் ரமணமா முனிமேல்
புகன்றனன் தோத்திர மாலை
கருவிகத் தின்ப நிலைபெற வானுங்
கூறில்வாழ் நடேசனென் கவிஞன்.

சென்னை

ஸ்ரீமத் வடிவேலு செட்டியாரவர்களின் மாணவர்

கீழ் நகர்

## ஸ்ரீமத் வேணுகோபால நாயகரவர்களியற்றிய

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

அருமறையு மாகமமு மறுதினம்போற்
 றருணகிரி யமர்ந்தா னந்த
தருவெனவே தன்னடைந்தார் தமக்கறிவா
 நிலையருளுந் தகைமை வாய்ந்த
பெருமகனா முனிமீதா பாமாலை
 கீர்த்தனங்கள் பெட்பா ளுங்கூர்
வருபுலவ னடேசகவி வரைந்துகருக்
 குழிநாவலியா வாழ்வுற் றனே.

---

சம்பக்கிரி பிரமபீடம்

ஸ்ரீமத் அச்சுதாநந்த சுவாமிகளின் மாணவர்

வல்லம், வித்வான்

## ஸ்ரீமத் வைத்தியலிங்கம்பிள்ளையவர்களியற்றிய

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

பாற்பியுள் விருளைத் தன்னிலை விளக்கிப்
 பக்குவர் தம்மையாட் கொள்வா
ஆற்றமெய்ஞ் ஞான பாலுவா யருணை
 யுறுபரம ணரிபன் முனிற்
றேற்றிய முறையிற் பாக்களுே பிசையிற்
 றுலங்குநற் கீர்த்தனம் பலவு
மாற்றரு மானுங் கூர்வரு நடேசன்
 வரைந்துவாழ் வெய்தினன் மாதோ.

செய்யாறு தாலூகா பொதியார் பாளையம் சமரச சன்மார்க்க

சங்கத்தின் அக்கிராசனர்,

## சென்னை ஸ்ரீமத் ந. சுப்ரமண்ய அய்யரவர்களியற்றிய

கட்டளைக் கலித்துறை.

பண்ணார் மறையின் முடிமே விலங்கும் பரம்பொருளை
யுண்ணாடு சோண கிரிவாழ் ரமண னொளிர்பதத்திற்
றண்ணார் சுவைபெறு தோத்திரமஞ்சரி தந்தருள்ந்தான்
மண்ணார் திருவாணுங் கூர்வாழ் நடேசனென் மான்கவியே.

---

சென்னை

ஸ்ரீமத் கோ. வடிவேலு செட்டியாரவர்களின் மாணவர்

## ஸ்ரீமத் கந்தசாமி முதலியாரவர்களியற்றிய

நேரிசை வெண்பா.

சீராருணை மேவுமருட் சீமான் ரமணமுனி
பேரமரத் தோத்திரங்கள் பெய்துரைத்தான்—நாரமைந்த
அணுங்கூர் வாழுகின்ற அன்புநடே சப்புலவன்
தேனூறுந் தென்மொழியாற் றேர்ந்து.

---

பர்லாகி மிடியைச் சார்ந்த பாகுலா

சதாசிவபீடம்

மஹான், ஸ்ரீ ஸோமலிங்காஜமானஸ யோகீஸ்வரர்

மாணவருள்ளொருவர், சந்நிதமங்கலம்.

## ஸ்ரீமத், முனிசாமி யோகியவர்களியற்றிய

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

பிறப்பிறப் பென்ப தூன்பலே யவித்தைப்
பெருங்கட லழுந்துநா னினைப்பு.
மறப்பாக மௌனதி லருணைவாழ் ரமண
மாமுனி மலர்திரு வடிக்குச்
சிறப்புறு மின்சொற் பாமணி மாலைத்
தெளிவொடு புனைந்தன னமித
புறப்பகை யிலகா ணுங்கூர் நடேசப்
புகழ்ப்பெயர் புலவர்கோன் மாதோ.

குளப்பாக்கம்

கவி. ஏ. அப்பாசாமி நாயுடு அவர்கள் குமார்

## ஸ்ரீமத். சடகோப நாயுடு அவர்களியற்றிய

நேரிசை வெண்பா.

மாதவத்திற் கோருறையாய் மன்னு மருணையினி
லேதமில்ஞா னம்புரிபா லின்பமளித்—தேதானி
மாந்தர்க் கருளுநட்டும் வள்ளல் ரமணனெனு
மேந்தறிருத் தாளுக் கியைந்து.

அறுசீர் விருத்தம்.

மற்றவ னன்பிற்பூத்த வண்டமிழ் மலரி னைத்து
சொற்றபூ மாலைக் கெல்லாந் தூயதே தென்று ஞன்னி
கற்றவர் வியக்குஞ் சீர்சால் கவிநட ராஜன் நல்ல
குற்றமில் நற்பா மாலை குலவுறப் புனைந்தான் மன்னோ.

இந்நகற் றெருடையி லார்ந்த வெழிலொடு பொருளுந் துன்னு
மந்தமி லன்பு மெல்லா மளப்பதற் காமோ வாழ்ந்த
பந்தமற் றருளா ராசான் பண்பினுக் கியைந்தோர்க் கியாதும்
முந்தவந் தொளிரு மென்றே மொழிந்திடற் கிவைசான் றாமே.

---

ஓம்

திருவண்ணாமலை

## ஸ்ரீ ரமண மகரிஷியவர்களின் சரித்திரச்சுருக்கம்.

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

பல்வளஞ் செறிந்த பாண்டியத் திருநாட்டுப்
பைந்தமிழ் வளர்திருச் சுழியிற்
சொல்லரு மறையோ னருந்தவ முயன்றோன்
சுந்தர னெனுந்திருப் பெயரோ
னெல்லையிற் றகைசேர் கௌரிநேர் மனையோ
டியைந்திரன் டாவநா சிரமத்
தில்வருங் காலோ ரரியசேய் தோன்றித்
திகழ்ந்ததக் குலவிளக் கெனவே. 1

அந்தணன் மகவேங் கடராம னெனுமொரு
மரபுதா மங்கொடுங் குலவிப்
பந்தமா ரறிவைத் திட்டிமெய்ஞ் ஞானம்
பயக்குயிர்க் கலைபயின் றிடவே
சந்தமா ரால வாயவாய்ச் சார்ந்து
தண்டமி ழாங்கிலங் கற்றுச்
சிந்தையுந் தேர்ந்து வளருநாள் வயதுந்
தீர்ந்ததோ ரேழிரண் டன்றே. 2

பள்ளியிற் பழகு மிவ்விளம் பருவம்
பக்குவர்க் கெட்டுமெய்ப் போத
மொள்ளிய வழியிற் றேர்ப்பந்தொளிர்க் கிடுமோ
ரொப்பினற் பெறும்வந் தெய்தத்
தெள்ளிய விளக்க முடையனு யுறுநாட்
டேசவிர் திருவருட் செயலா
லுள்ளமுந் தெரிய "வருணையங் கிரி" யென்
றோர்சொலு ணுயுதித் ததுவே. 3

அம்மொழிக் குளவுண் மைப்பொருட் டெறி
யருணையி னீசனே தன்னைத்
தம்மடி யறாகத் திருவுளங் கொண்டு
சாற்றினு னிவ்வண மெனவச்
செம்மலைச் சிவன்ற னிணைமலர்த் தாளைச்
சேர்ந்துநீர் கூவலிங் குற்றே
னும்மக வாமெய் கருள்புரி யெந்தாய்
நம்பது மெனவிரந் தானல். 4

இன்னண மிறைக் கோமெழு நன்றான்
டிப்குமு னெம்பிரா னருளாற்
பொன்மலி யருணைக் கிரியடைந் துபவப்
புரையகற் றுறைபூண் டறிவாய்ப்
பன்னரும் ஞான பானுவா யொளிர்வான்
பழுதமுற் றங்கிரண் டுருவாங்
கன்மனத் தவனேற்குப்வருள் ரமணக்
கத்தனுர் நற்சரி தமிதே. 5

---

ஓம்

ஸ்ரீ ரமண சத்குருவே நம:

# ஸ்ரீ ரமண ஸ்தோத்திர மஞ்சரி



## பாயிரம்.

---

### விநாயகர் வணக்கம்.

நேரிசை வெண்பா.

திருவருணை மாநகரிற் றெய்வமாய் வாழும்
பெருரமணன் றன்புகழைப் பேசச்—சரவணற்கு
மூத்த முதலே முநிராறிவே மும்மலங்க
ளீர்ந்தகற்றை வேயருள்செய் நீ.

### அருணாசலேசுவரர் துதி.

நேரிசை வெண்பா.

அருணா சலனேநீ யன்றகத்திற் றோன்றி
"யருணா சல"மென் றறைந்தவ்—வருணைக்
குருரமண னைத்தொடர்ந்தாட் கொண்டா யதுபோற்
றருணமிதெ னைக்காப்ப தற்கு. 1

பேறும் பெரும்புகழும் பெற்ற ரமணமுனி
கூறுமொழி யொன்றுற் குறைநீக்க—வீறுமிகு
மண்ணு மலைக்கவலை யன்பா யழைத்ததிரு
வண்ணா மலையரசே யாள். 2

உண்ணா முலைத்தாயை யோர்பாகங் கொண்டதிரு
வண்ணா மலையோய்நி னன்பின்றேல்—நண்ணுதெற்
கோதுஞ் சிவாநந்த வுண்மை வடிவான
சாது குருரமணன் றாள். 3

ஞாலம் புகழருணை ஞானகுரு மாரமணன்
நீலமிகு தோத்திரப்பாச் செப்பிடற்கு—ஞாலமிசை
மாலயன்கா ணாமுடியு மாணடியும் பெற்றொளிக்
காலமதி லென்மனநீங் கான். 4

## உண்ணாமுலை யம்மன் துதி.

### வெண்பா.

பாசமிலா ளாயினுமுட் பாசமிகு மன்னையென
நேசமுட னேயிருவாய் நீகாக்கு—மாசகலு
மாரமண னைப்பாட மாண்மிகுமு ணாமுலையே
யீரமுட னெற்கருள்வா யின்று.

## குருவணக்கம்.

### எழுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

ஆதியி லால்வர்க் குயர்பொருட் காட்டி
யன்புறு மருணையில் சேர்ந்த
கோதிலா ஞானக் குரவனே நினது
குணமிகு மிணைமலர் தாளிற்
றீதிலா தோதுந் தோத்திர மலரைச்
சேர்த்திட வருளுவா யென்றன்
முதிரு வினைய கமனாதே சிகனே
தட்சணா மூர்த்திசற் குருவே.

## பரம்பொருள் வணக்கம்.

### அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

ஆதிநடு வந்தமெனும் வடிவொன் றில்லா
வகண்டபரி பூரணமா யமைந்த சுத்த
சோதியதாய்ச் சுடரொளியாய்த் துரிய வாழ்வாய்
சொன்முடிவாய் மெஞ்ஞானச் சொரூப மாகி
யாதிமத்ய யந்தமுமா யறிவாய்த் தூய
வானந்த சுகாதீத மளிப்ப தாகித்
தீதில்பர வெளியதுவாய்த் தெளிந்த மோனத்
திருவருளா மொருபொருளைச் சிந்தை செய்வாம்.

ஓம்

தத் சத்

ஸ்ரீ ரமண சற்குருவே நம:

# ஸ்ரீ ரமண தோத்திர மஞ்சரி.

## நூல்.

எண்சீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

சுந்தரர்வாய் வாழ்த்துதிருச் சுழிவாழ் தூய
    சுந்தரவே தியர்தமக்கோர் சுதனாய்த் தோன்றி
சந்தமிகு மருணையினிற் றழைக்கு மீசன்
    சாதநிலை தாச்சோண சைலமேவி
பந்தநிலை தீர்ந்தடுத்த பத்தர் தம்மைப்
    பரிவுடனே யாட்கொள்ளும் பரம னேயிங்
கெந்தையென வடையுமெளி யேனை யாள்வா
    யெழிலருணை ரமணனெனு மினிய வாழ்வே. 1

ஐயனே முனியரசே யமரர் கோனே
    யகண்டாநந் தக்கடலே யறிவே சுத்த
மெய்யனே யருளுருவே மேலா மின்பே
    விருப்புவெறுப் பொன்றுமிலா விமல வாழ்வே
துய்யனே சுகநிறைவே துரிய நாடே
    தொந்தவினை தீர்த்தருளத் துதிக்கு மிந்தப்
பொய்யனே னெனைத்திருத்தி போத நல்காய்
    புகழருணை ரமணனெனும் புனித வாழ்வே. 2

ஏகமாம் வையகத்தோ ரேதம் நீக்கி
    யின்புறுமா றோருருவா யிலங்கித் தன்னை
வேகமா யணுகிடும்பக் குவரை யேற்று
    வெந்துயரால் வாடுமவர் வினையைப் போக்கி
தேகமுள் ளீசனையே தெரியக் காணுந்
    தெருளருளுந் தேவனெனத் தெளிந்திங் குற்றேன்
சோகமா ரென்பவமுந் தொலையச் செய்வாய்
    தொல்லருணை ரமணனெனுந் தூய வாழ்வே. 3

சித்தமுநின் மெய்யடியார் நின்பொற் றாளை
நின்மலமாஞ் சிந்தையதி லிருக்க வைத்து
மெத்தவுமன் புறுபணிகள் மிகப்பு ரிந்து
மெய்யுலகப் பெருவாழ்வை மேவி யுய்ந்தார்
நத்தியினை முன்புகழை நவில்கின் றேனால்
நாணுமவர் போலுயர்ந்த நாட்ட மெய்தி
முத்திநிலை யுறக்காட்டி முன்னிற் பாயே
மூதருணை ரமணனெனு முதிய வாழ்வே. 4

கண்டேநின் றிருவடியைக் கடையே னுய்யக்
கருதிடுமென் பணிகொள்ளக் கருணை கூர்ந்தாட்
கொண்டேற்ற முறமொருசொற் கொடுக்கப் பெற்றேன்
குறிக்கரிய தனிநின்றாங் குணங்கெ டாது
விண்டேத மறுநிலையை விரும்பி நிற்கும்
விதமருளி யென்னையுமுன் விமல பாதத்
தொண்டேற்குந் தொழும்பர்கடந் தொகையுட் சேர்ப்பாய்
தொழுமருணை ரமணனெனுந் தூய வாழ்வே. 5

இருளறுசெ யொளிதருமெய் யறிவ வாழ்வே
யின்னமுதே கற்கண்டே யினிய பாகே
தெருளுதவு மருள்மாரி தெளிக்கும் வானே
தெய்வமறை யுள்ளுறையுந் தேவே யென்றன்
மருளறுக்கு முயர்ஞான மளித்தெந் நாளும்
மறவியுறா தாகாது வாழு மாறுன்
னருளொளியை யளித்திடுவா யடியேன் றன்னை
யணியருணை ரமணனெனு மமல வாழ்வே. 6

அம்மாநீ யெனையீன்ற வன்னை போலு
மடியேனின் சேயெனவு மன்பு . . . ண்டு
சும்மாவா யிருந்திடுமோர் சூழ்ச்சி காட்டிச்
சுகமுறச்செய் நின்மாண்பைச் சொல்லற் காமோ
பெம்மானின் றிருவுளத்தி லிரக்க மென்னே!
யிசையுமிந்நின் சந்நிதிக்கோ ரெல்லை யுண்டோ
பெம்மானே யடியனிலை பெற்ற தேவே
பேசருணை ரமணனெனும் பெரிய வாழ்வே. 7

வேண்டுவன வெல்லாமும் விளக்கிக் காட்டும்
வேதங்க ளுட்பொருளாய் விளங்கு வோனென்
றாண்டவனே மெய்யன்ப ரகத்து றைந்தக்
ககநிலையைப் பெறவருளு மகண்டா னந்தத்
தாண்டவஞ்செய் நினதுமலர் தாளைச் சுற்று
தமியேனின் சென்னிமிசைத் தாக்கும் வாஞ்சை
பூண்டவனே யருளொளிசேர் பொருப்பின் மிக்கப்
புகழருணை ரமணனெனும் புனித வாழ்வே 8

மண்ணுலா மாளிகைபல் வகையாய்க் கட்டி
மகிழ்ந்தவற்றில் வதியாது மாளும் கூறும்
அண்ணாந்து நோக்கிடற்கு மாகா தோங்கு
மத்தகைய மாளிகைக ளழியுங் கூறுங்
கண்ணாலே கண்டிருந்தும் கருத்தை விட்டுக்
கலங்குகிறேன் பொய்பற்றிக் கால மெல்லாந்
தண்ணாரு முனதருளைத் தந்தாட் கொள்வாய்
தகையருணை ரமணனெனுந் தவத்தின் வாழ்வே 9

சுகமலியும் மனமறவோர் சுதியைக் கற்றுச்
சொருபநிலை யங்கேயாந் துரிய மஞ்சா
மிகபரங்க ளென்னுமிவை யிரண்டு மற்ற
விந்நிலையே சுத்தநிலை யேக்க மற்று
சகசமடை வதுமங்காஞ் சஞ்ச லத்தால்
சலிக்காம லிருந்தபடிச் சார்வா யென்றே
பகருமரு ளாலான படிவ னோகீர்
பயிலருணை ரமணனெனும் பரம வாழ்வே 10

தாராயோ நின்மார்க்கந் தமியே னுய்யத்
தந்தபடி யந்நெறியைத் தழுவி நிற்கப்
பாராயோ கடைக்கண்ணாற் பட்சம் வைத்துப்
பவக்கடலி லாழ்ந்தழுமிப் பாவி யென்னைக்
காராயோ காலனிடர் களைந் தெவர்க்குங்
கதிபருளுங் கருணைநிறை கடலே யென்முன்
வாராயோ வரமருளி மருளைத் தீர்க்க
வளாருணை ரமணனெனும் வசையில் வாழ்வே 11

நரை திரைகள் பிணிமூப்புச் சாக்கா டென்னும்
நலியுறும்பல் லுடல்யோனி நான்கி னூடுந்
திரைகடலி லெழுவனபோற் றினமு மோம்பித்
திகைப்புறுமென் பவரோகந் தீர்ந்து நாளுங்
கரையிலுன தின்பாசக் கடலின் மூழ்கிக்
கதிபெறவே யடியேற்குக் கருணை செய்வாய்
தரையிலுயர் தவத்தரெலாந் தாழ்பொற் குன்றே
தகையருணை ரமணனெனுந் தவத்தின் வாழ்வே 12

உன்னிலையிற் பிரியாம லுறுவா யானு
லுள்ளபடி யாங்கெய்து முண்மைப் போதம்
உன்னிலையை யகன்றலைய வுரைக்கும் பந்த
முன்னுளம்வந் தணுகிடுமிஃ தறுதி யென்ன
வென்னிலையை யாய்ந்தறிய வெளிதாய்ச் சொன்ன
வேகபர சிவமேயென் னிதய வாழ்வே
என்னிலையு முன்னிலையு மேகஞ் செய்வா
யெழிலருணை ரமணனெனு மினிய வாழ்வே 13

வாங்கியோர் வாசியைக்கும் பித்து விட்டு
வகையுடன்மா யோகஞ்செய் மாண்பு ளோருந்
தாங்கிய கலையாயுந் தகையு ளோருந்
தழுவிடுநின் றாட்பரிசத் தாற் றெளிந்து
தூங்கியே மாற்றமுறுந் தூலக்க முற்றுத்
தூங்காமற் றூங்குமொரு துறையிற் சேர்ந்து
ஓங்கியே வாழ்ந்தாரவ் வுயர்வ ருள்வா
யொளிரருணை ரமணனெனு முண்மை வாழ்வே 14

சத்தியமா யோதருநின் றகைமை கேட்டுச்
சாதனைசெய் திடநின் சரண டைந்தேன்
நித்தியமாய் நீக்கமற நிறைவுற் றெங்கு
நிலவுபெரு வெளியாகி நின்ற நின்பால்
பத்திமிக வுற்றுதினம் பரவு நாயேன்
பவக்கடலை நீந்தியுயர் பதமென் றோது
முத்தியெனுங் கரையடைய முயன்ற ருள்வாய்
முதலருணை ரமணனெனு முத்தர் வாழ்வே 15

இனியேனு முன்கருணை யெய்துமோ வென்
னின்னலெலா மறுமோவென் னிறைவ னேமா
முனியேயென் னூழ்வினைகள் மூறியு மோநின்
மூளரியந்தா ளென்முடியின் முடிக்கற் காமோ
கனியேகற் கண்டேதேன் கலந்த பாகே
கருணைநிறை யானந்தக் கடலே நாளுந்
தனியேனா னின்றுசுகந் தரிக்கச் செய்வாய்
தகையருணை ரமணனெனுந் தவத்தின் வாழ்வே 16

தாட்பணிபு மாசையினாற் றாவி வந்துன்
றஞ்சமென வடைந்தேனைத் றுதை யேமிற்
காட்படுமென் னகநிலத்தை யடைந்து மூடு
மாணவமும் மலமாதி யழுக்கை யெல்லாந்
தூட்படச்செய் துறுபகையைத் துடைத்து மோனத்
துரியநிலை யடையவருள் துரித மாக
நாட்பலவாய்த் துன்புழந்து நலிந்தே னையா
நவிலருணை ரமணனெனும் நவையில் வாழ்வே 17

சஞ்சலத்தா லலைவுறுநான் சலித்து வந்துன்
சரணடைந்தச் சஞ்சலஞ்சேர் தகைமை கேட்கத்
தஞ்சமடைந் தவனுமென் சங்கைக் கன்று
"தனைவிட்டுச் சஞ்சலமுற் றவரார் காணும்
அஞ்சிமிக வலைவுறுநின் னச்சங் கைக்கும்
அதுவேதான் விடைநீயு மதுவே யாவாய்
சஞ்சலமற் றிதயமதைச் சாரெ"ன் றோதுஞ்
சதிரருணை ரமணனெனுஞ் சசன வாழ்வே 18

கோதையர்பா லன்புமிகக் கொண்டு ழன்று
கொல்விளக்கிற் பூச்சியெனக் குதித்தோ டோடி
சூதையுண ராதிழிபொய்ச் சுகத்தை நாடிச்
சுழன்றலைக வாழ்க்கையினாற் சோர்வுற் றந்தோ!
மேதையிழந் தடர்துன்பின் வெளியு மெற்கோர்
மெய்ப்பொருளை யளித்தென்ப மேவச் செய்த
தாதையென வந்தருளைத் தந்தாட் கொள்வாய்
தகையருணை ரமணனெனுந் தவத்தின் வாழ்வே 19

ஆறாவது சினமென்று சான்றோர் வாக்கை
யறுவேனும் பற்றாநிங் ககமிக் குற்றுஞ்
சிறுமொரு வாவமெனச் சினமேற் கொண்டுஞ்
செரிபருக் கிழைத்தேபற் றீங்கு நாளும்
ஊறுபடும் பழிக்கஞ்சா துழலா நின்றே
னுத்தமமா முன்பதத்தை யுன்னி பின்று
கூறுதமிழ்க் கொக்கியென்றன் குறைய கற்றாய்
குலவருணை ரமணனெனுங் குறைவில் வாழ்வே 20

ஏழாக வகுத்தவையி னிறுதி காட்டி
லேகனென வொளிருமரு ளெய்தப் பெற்றோர்
சூழாது சூழ்ந்திடுநின் சுகபோ கத்தால்
சுத்தராய் மெய்ஞ்ஞானச் சொரூப மானார்
வாழாது வாழ்ந்திடுநின் னன்ப ரோடு
வழியடியே னென்றனையும் வாழச் செய்து
பாழாகு மகத்திருளைப் பகைத்தொ ழிப்பாய்
பதியருணை ரமணனெனும் பரம வாழ்வே 21

தற்பரமே தனையுணர்ந்து தானாய் நிற்குந்
தவமுனியே யென்வினையைத் தவிர்த்தாய் பின்னுஞ்
சிற்பரமா மத்துவித சிவபோ கத்தைச்
சிறப்புறநா னெய்துவதுன் செயலா லன்றோ
நற்பதமா மோனநிலை நானிங் குற்று
நலமுறுநின் னடியரொடு நாளுங்கூடிப்
பற்பலயோ கத்தியானம் பயிலச் செய்வாய்
பதியருணை ரமணனெனும் பரம வாழ்வே 22

பணைப்பித்த மிகையாகிப் பதைப தைத்துப்
பல்வகையாம் பழிக்கஞ்சாப் பவங்க ளாற்றி
மணக்கோலந் தரித்துகந்து மறுக ணத்தில்
மாணவனை தருதுயரா மருவக் கண்டுங்
கணக்கொன்றி னிலுமடங்காக் கருமஞ்செய்து
காலனிடர்க் காளானேன் கதிவே றில்லை
பிணக்கொன்று மின்றியருட் பேதை யேற்குப்
பேசருணை ரமணனெனும் பெரிய வாழ்வே 23

ஆனாலு மநியாய மடிமை வாழ்க்கை
யவனிதனி லென்போலோ ரசட னுண்டோ
வூனுலா முடலிலுறு முறவைப் போக்கி
யுயர்சரியை கிரியையுட னியோகஞ் செய்தோர்
தானான நிலையுடைய தனிஞா னத்தைத்
தரிக்கப்பெற் றின்புற்ற தகையின் மிக்கோர்
போனானின் புறுதற்கோர் பொருளை நல்காய்ப்
புகழருணை ரமணனெனும் புனித வாழ்வே 24

சடமாயுஞ் சித்தாயுஞ் சமய மாயுஞ்
சமயாதி தப்பொருளாஞ் சாமி நின்னை
மடமென்னும் பேதமையின் வசத்த னான
மாபாவி யின்றளவு மறிந்தே னில்லை
திடமுறநா னினியேனுந் தெரிந்துன் றனைத்
தேடியுயு மாறென்னைத் திருத்தி யாளுங்
கடமையுன தெனவுணர்ந்தே கருணை செய்வாய்
கவினருணை ரமணனெனுங் கருணை வாழ்வே 25

இறந்திறந்து பிறந்திடுமென் செனம மெண்ணி
யித்தனையென் றோர்கணக்கி லியம்பப் போமோ
பிறந்துபிறந் திறந்திடுமிப் பேய னின்று
பிறப்பற்று நிற்குநிலை பேணி யெங்கும்
பறந்துபறந் தோடிவரும் பறவை போன்றிப்
பார்முழுது மலைந்தலுத்துன் பதம டைந்தேன்
சிறந்தொளிர்மெய் ஞானநிழற் றெரிந்த ளிப்பாய்
திருவருணை ரமணனெனுந் தெய்வ வாழ்வே 26

நினைவொன்றுந் தோன்றாநன் னிட்டை கூடி
நித்தியவாழ் வாஞ்செல்வ நிறையப் பெற்று
மனைமக்க ளாம்பகைவர் வலிய கற்றி
மருவிடுமா னந்தசுக மடுத்தின் பாரு
முனைநாடி வருமவர்கட் குறுதி யாக
வுயர்வெதுவு முறுமெனக்கேட் டுற்ற நாயே
னெனைத்திருத்தி யாட்கொண்டோ ரின்ப நல்கா
யெழிலருணை ரமணனெனு மினிய வாழ்வே 27

ஆதிநடு வந்தமிலா வருவ மாகி
யறிவரிய வகளங்க வகண்ட மான
சோதியென சுடர்மருவுஞ் சொரூப மாகிச்
சொன்முடிவி றனித்தவொரு துரிய வாழ்வாய்
நீதிமய மாயெங்கு நிறைவுற் றோங்கும்
நின்மலமாம் பரம்பொருளை நீடு வாழுங்
கோதிலருட் குருவேயென் குறைய கற்றுங்
குளிரருளை ரமணனெனுங் குறைவில் வாழ்வே 28

நீராமை யில்ம்புகவந் நிலையு ளோர்க்கு
நேராத துன்பமெலாம் நேரு மென்பார்
போராடும் பொறுமையது புகுமு ளத்தார்
போலெவருங் கெட்டழியப் போகா ரந்தோ!
தோராதா ரெல்லாமோர் தெய்வம் பற்றுந்
தெள்ளியர்போ லடித்துயிற தேவி கழ்ந்து
பூராயம் புகன்றழிவார் பொல்லே லெனக்கார்
பொன்னருளை ரமணனெனும் புனித வாழ்வே 29

பண்ணேனு னின்பூசைப் பணிந்து நாளும்
பகர்ந்திலனு னின்னாமம் பரிந்து சற்றும்
நண்ணேனு னின்றொண்டர் நற்சங் கத்தை
நன்மனதோ டொருநலமு நான்செய் தில்லே
னெண்ணேனு னிதுகாறு மிறைவ னேனின்
வினிபறுதி யென்றுறு பொங்கி யாண்டு
கண்ணேயென் கவலைமுழுதுங் களைந்த ருள்வாய்
கனியருளை ரமணனெனுங் கருணை வாழ்வே 30

தாயற்ற சேயெனவுந் தளர்ந்து வாடுந்
தமியேனைத் தாங்கிவருஞ் சனன மென்னும்
நோயற்ற பெருவாழ்வை நொடியி லெய்தும்
நான் [illegible] னெனக்க ளமைப்பாய்
[illegible] லனேயிவ்
[illegible] வண்டப
வளரருளை ரமணனெனும் வசையில் வாழ்வே 31

ஞாதிருநா னருஞான ஞேய மாயு
மொன்றுபடு மவற்றினொழு மூவகை யாயும்
பாதிமதி யணிபரன்மால் பங்க யத்தோன்
பண்புளபற் றேவாயும் பற்றொன் றில்லா
நீதிமிகுத் தனைத்தினுளு நிறைந்து நின்ற
நிமலபரம் பொருளாயு நினைந்த டைந்தேன்
நிதிலருட் குருவேமெய்த் தெளிவ ருள்வாய்
திருவருணை ரமணனெனுந் தெய்வ வாழ்வே 32

ஐவகையா மண்ணாதி பூதந் தன்னா
லாகின்ற வுடலாதி யனைத்து மிங்கு
மெய்வழிய தெனத்தருக்கி மிக்கி ளைத்தோர்
மேதினியி லெவருமிலை மேதி லென்போர்
பொய்வழியிற் புகுந்துழலும் புன்மை யேற்றுப்
புண்ணியனே யினியுமருட் புரிந்தி டாயே
லுய்வகைவே றொன்றுமிலை யுண்மை கண்டா
யொளிரருணை ரமணனெனு முண்மை வாழ்வே 33

பூர்த்தியுறு மெய்யன்பர் புகழ்ந்து போற்றிப்
புகனும ரூபங்கள் புனைந்தி தவர்க்கும்
பார்த்திடற்கோர் வடிவமுமுட் பாச மிஞ்சிப்
பகர்ந்திடற்கோர் பெயருமிலாப் பரமாய் நின்ற
மூர்த்தியுனை முழுதறியா மூட னென்னை
முற்றுமறிந் துயர்ந்தபொருண் முடிவைக் காட்டி
காத்திடுவாய்க் குறைபனைத்துங் களைந்திஞ் ஞான்று
கவினருணை ரமணனெனுங் கருணை வாழ்வே 34

ஒன்றைவிட்டு மற்றொன்று பொருக ளத்தி
னுதித்திடுபற் கோடியினைப் புறவ முக்கிற்
றொன்றுதொட்டே வருமெனது நாட்ட நெஞ்சாற்
றொடர்ந்தென்னைப் பிறவியெனுந் தொலையா சோகந்
துன்றுமதன் றுயர்பொறுக்க மாட்டா தின்றுன்
றுணையடியைப் பற்றிநின்றேன் றுன்ப கற்றி
மன்றுணடிக் குந்திருவே வாழ்வ ளிப்பாய்
மன்னருணை ரமணனெனு மருவில் வாழ்வே 35

வஞ்சனைகள் பொய்சூது வாது முக்கும்
வாசனைகள் பல பெற்றெனது மனமெஞ் ஞான்றுந்
துஞ்சலிலா தலைந்தலைந்து சோரு மாயின்
றாபநிலை யுறலென்றோ துகளை யறுத்துப்
பஞ்சணைக்கு முயர்போகப் பாயின் மீது
படுத்துறங்கா துறங்கிடுநற் பழக்க மேவிக்
கொஞ்சமுனை யாதரவு கொடுத்தருள்வாய்
குலவருணை ரமணனெனுங் கோதில் வாழ்வே 36

வழுவாது மாமறைசொல் விதியைப் பற்ற
வல்லபெரி யோர்நடக்கும் வாசையில் மார்க்கந்
தழுவாதென் மனவழியே தகுதி யற்ற
தர்க்கமிகப் பேசுவர்க டமைய கன்று
நழுவாது தீவினைக ளனிபு ரிந்து
நரனையெலாங் கழித்தேனிந் நாயி னேன்றன்
முழுவாத லையுமகற்றி முத்தி நல்காய்
முதருணை ரமணனெனு முனிவர் வாழ்வே 37

பூண்டகுரம் பையினகத் தாம் புறத்துஞ் சூழும்
புனிதனையா டாதிதுவாய்ப் புவியிற் றோன்றி
மாண்டிடுமென் னம்மம்ம! மதியென் னென்போன்
மாணசன னக்கலையு மாற்றி யேதும்
வேண்டியவா றாகவுதிற மேவு நின்னை
விரும்பிபணிந் துய்யும்வகை விட்டே னந்தோ!
மீண்டினியா யிறுமென்னை விரைந்தாட் கொள்வாய்
மிளிரருணை ரமணனெனு மிடியில் வாழ்வே 38

கண்ணுறன் கற்பகமே கயவ னேமன்
கருமத்தை யென்புகல்வேன் கதியு முறா
மண்ணுதி யைம்பூத மயமே யாகும்
மன்றவுலகத் தோற்றமதின் மயக்க முற்றேன்
பண்ணோர்கள் மறைப்பொருளின் பரிசு மூட்டிப்
பண்புடனின் திருத்தாளைப் பணியக் கொள்வாய்
நண்ணுந திலையுனரு ளேட்டக் கண்டாய்
நகிலருணை ரமணனெனும் நவையில் வாழ்வே 39

மனமதுவே பெருமாயை மனமொழிந்தால்
மன்னுசிவ மயமாமென் மருமங் கேட்டும்
மனமதையே நிலையாக மதித்துத் தாழும்
மாபாவி யேனிதுகான் மறந்து நின்னை
சினமுதல்வி காரங்கள் சேர்ந்து மிக்க
செருக்குற்றே னந்தோவிச் சிறிய னென்னைத்
தினமறவா தருள்சுரந்து திருத்தி யாள்வாய்
திருவருணை ரமணனெனுந் தெய்வ வாழ்வே. 40

தேக்கற்ற வாவுநசை தீண்டா தற்றுந்
தேகாதி வாசனையின் சேர்க்கை யற்றும்
போக்கற்றும் வரவற்றும் புலன்க ளற்றும்
பொருந்துமிரு மைக்காகும் போக மற்றும்
வாக்கற்று மனமற்றும் வைய மற்றும்
வளர்பிறப்பு மிறப்புமினி மருவா தற்றும்
நீக்கற்று முனைக்கலக்கு நிலைய ருள்வாய்
நீளருணை ரமணனெனு நிமல வாழ்வே. 41

பந்தமறுத் திகழ்ஞானம் பழுத்தி லங்கும்
பண்புயரோர் மலையாயுட் பகைய கன்ற
முந்தைதவப் பயனாக முளைத்தெழுந்து
முனிவர் துகை முழுதினுக்கு முதல்வ னாகு
மெந்தைநின திணையடியை யேத்தி நிற்கு
மென்பிழைமுற் றிலும்பொறுத்து மிரக்கமுற்றுஞ்
சிந்தைதெளி வளித்துனடி சேவை நல்காய்
சேரருணை ரமணனெனுஞ் செய்ய வாழ்வே. 42

தான்கொண்ட தவமதனாற் றன்னைக் காணத்
தகுமெனவே தங்களெலாஞ் சாற்றக் கேட்டும்
ஊன்கொண்ட வுடலாதி யுலக மெல்லா
முள்ளபடி நித்தியமென் றோடி யாடி
யான்கொண்ட வகங்கார மமகா ரத்தா
லரியதவ மேதுக்கென் றயர்ந்த வென்னை
வான்கொண்ட மறையெனநீ வந்த ளித்தாய்
வளரருணை ரமணனெனும் வசையில் வாழ்வே. 43

நின்பாலே நினைவுள்ளார் நேசம் வேண்டும்
நீதமிக பவமகன்று நிற்றல் வேண்டும்
என்பாலே நின்னதுள மிரங்கல் வேண்டும்
இரவுபக லுனையேபோ னேத்தல் வேண்டும்
அன்பாலே பணிந்துன்னை யடைதல் வேண்டும்
அந்தகனின் வேதனையென் றறிதல் வேண்டும்
இன்பாலே யெனக்குவகை யிணைக்க வேண்டும்
எழிலருணை ரமணனெனு மினிய வாழ்வே. 44

மிக்கவோர் மறுபத்து மூன்று பேர்கள்
மெய்ப்படைந்த பத்ரகிரி பட்டினத்தார்
தக்கவே மன்னர்திரு வாதவூரார்
தவமுயன்ற வருணகிரி தாயுமானார்
துக்கமுறு முலகினைப்பொய்த் தோற்ற மென்னத்
துறந்தாக சியமுணர்ந்து துலக்கமுற்று
முக்கணிறை யருள்பெற்ற முனிவர் கோவே
மூதருணை ரமணனெனு முனிவர் வாழ்வே. 45

ஆண்டவனே நினது திரு வருளா லென்ற
னவித்தைதனைக் களைந்துனடிக் காளாய் செய்து
நீண்டவென்றன் பவமதற்கு மூலமாகும்
நினைவெனுங்கற் பனைமுழுதும் நீங்கி யென்றுந்
தாண்டவஞ்செய் நின்னுருவைத் தமிய னேனுந்
தழுவியிரண் டறக்கலக்குந் தகைய ருள்வாய்
தீண்டவங்கண் முழுதொழிந்த தேவ தேவே
திருவருணை ரமணனெனுந் தெளிந்த வாழ்வே. 46

நித்தனே நின்பாதம் நினைவிற் கொண்டு
நிகழ்தொழும்ப னைத்தொடுமோ நீள வித்தை
சுத்தனே நின்பாலோர் சொல்லைக் கேட்ட
தொண்டனெனக் குற்றிடுமோ தொடர்ந்த மாயை
அத்தனே நின்னும மன்பா யோதும்
அடியேனுக் கின்னுமுண்டோ வடர் பிறப்பு
முத்தனே யெளியேற்கு முத்தி நல்காய்
மூதருணை ரமணனெனு முதிர்ந்த வாழ்வே. 47

பூமாலை புனைந்துன்னைப் போற்றி டாது
புண்ணியனே நின்றாளிற் புகழ்மிக் குற்ற
பாமாலை சாற்றிடற்குப் பட்ச முற்றேன்
பண்ணியல்க ளறியேனாற் படிப்பு மில்லேன்
தாமாகக் குழவிசொலு மழலைச் சொல்லிற்
றந்தையுகந் தகப்புறா தழுவு தற்போற்
பூமாநின் செயனவில் புன்சொ லேற்பாய்
புகழருணை ரமணனெனும் புனித வாழ்வே. 48

பகாருவல் லத்துளிதப் படிப்பை யெங்கும்
பரவிடச்செய் தருள்ஞானப் பதியே போற்றி
அகநிலையை யறிந்தன்ப ரான பேர்கட்
கந்நிலையை யுணர்த்திபவ மறுப்பாய் போற்றி
இகமிசையோர் சற்குருவா யிலங்கி நின்றிவ்
வெளியேனைப் பணிகொண்ட விறையே போற்றி
செகமதின்மீண் டும்பிறவாச் செல்வா போற்றி
திருவருணை ரமணநின் றிருத்தாள் போற்றி. 49

ஆராயு மறிவேநீ யாமென் றோது
மன்னாலே நினதமல ரடிகள் வாழி
நேராக நின்றெனது நிலைகாண் பித்த
நித்தியனே நின்பாதம் நீடு வாழி
பூராய மோதியெனைப் புரந்த ருட்செய்
புண்ணியனே நின்பதமெப் போதும் வாழி
சோராது கருணைமழை சொரியா நிற்குந்
தொல்லருணை ரமணநின் றுணைத்தாள் வாழி. 50

ஸ்ரீரமணபகவான் சேவடி வாழ்க.

---

# இசைச் செய்யுள்

## (தேவாரம்)

---

## முதற் பதிகம்.

ஆதியாயும னாதியாய்நிறை வாகியுந்திரு வாகியுஞ்
சோதியாய்மறை யந்தமாயுமத் துவிதச்சுக வத்துவாய்
பாதியாமிளந் திங்களைச்சூடும் பாமனாகவு நின்றதோ
ராதிசைவர்வா ழருணைமேவுமி ரமணதேசிக மூர்த்தமே. 1

உருவமாகியு மருவமாகியு மொப்பிலோங்கா ரமாகியுங்
கருவுமாகியக் கருவைக்காத்திடுங் கடவுளாகவு முவ்வருள்
குருவுமாயவன் சொல்லினாலெய்துங் கோதிலாவீடு மானதோ
ரொனளிர்ந்திடு மருணைமேவுமி ரமணதேசிக மூர்த்தமே. 2

வேதமோதொரு வடிவமாகியும் வேறுவேறுபல் ரூபமாய்
நாதத்தவி னேகமாயுனை நாடுவோர்க்கெழு மின்பமாய்
போதபூரணச் செல்வமாகியும் பொய்யலாப்பொரு ளாகுமோ
ராதவன்றவ ழருணைமேவுமி ரமணதேசிக மூர்த்தமே. 3

என்றுமெண்ணமு மெண்ணுவார்கட மிதயமோடிய லாகியுங்
கண்ணுமாகியக் கண்ணிலாரொளி காட்சியாயதி னேதுவாய்
மண்ணுமாகியும் விண்ணுமாகியும் மற்றவற்றுள யாவுமா
மண்ணலேயெழி லருணைமேவுமி ரமணதேசிக மூர்த்தமே. 4

ஊனுமாகியவ் ஊனுறும்பல வுயிர்களாகவு மவைகளாற்
காணுமிவ்வுல காதிகாட்சியின் கர்த்தனாகவுமி லங்குவோய்
வேணுமென்றுனை வேண்டினோர்க்குயர் விண்புகுந்திற மருளுவா
னாணவங்கெடு மருணைமேவுமி ரமணதேசிக மூர்த்தமே. 5

ஊருமாவது பேருமாவது வுருவமாவது மில்லதாய்
சேருமாருயி ருள்ளமாய்க்கறை தீர்க்குமோர்பெரு மோனமே
தாருமேபரு டனையனேற்கன்னை தந்தையாகிய நானுவே
ஆரியர்க்குய ரருணைமேவுமி ரமணதேசிக மூர்த்தமே. 6

பண்டுசெய்கரு மங்கள்கொஞ்சமும் பற்றிடாதென்னை நீங்கவே
தொண்டுகள்பல செய்துநானுனைத்தோத்திரங்கள்செய்தன்பினைக்
கொண்டுநின்றிருப் பாதமேவிபோய்க் கோலநீங்கியின் றுந்தனை
யண்டினேனருளருணைமேவுமி ரமண தேசிக மூர்த்தமே. 7

அத்தனேயுனை நத்தினேனென்னை யடிமையாகிடக் கொண்டுபின்
நித்தனேமுன மெத்தனைமுறை நீதமில்வினை செய்யினும்
முத்தனேநின தருளினாலவை முற்றுமாய்த்தெனை யாளுவா
யத்திசந்தவ மருணைமேவுமி ரமணதேசிக மூர்த்தமே. 8

கோழைநெஞ்சுறும் பேதைநீசொல்லுங் குறியினின்றுப யின்றிலே
னாழைவேறமாய்த் துநின்ற னுயர்பதத்திடை யாழ்த்தியிவ்
வேழையேனின தன்பரோடிணைந் தின்பமேவிடச் செய்குவா
யாழுநல்லரு ளருணைமேவுமி ரமணதேசிக மூர்த்தமே. 9

துரிபவாழ்விடை யமருமியோகருந் தொல்லருங்கவிப் புலவரும்
அரியவேதவிற் பன்னருந்தெரிந் தறைவதற்கடங் காததாய்
விரியுமுன்புகழ் விளம்பினேனிதை விரும்பியேற்றன தாகுநல்
லரணளித்தரு ளருணைமேவுமி ரமணதேசிக மூர்த்தமே. 10

---

## இரண்டாம் பதிகம்

---

வேதமாய் வேதனாய் வெளியதாய் வீடுமாய்
போதமாய் பொய்யிலாப் பொருளுமாய் புனிதமாய்
நாதமாய் விந்துமாய் நலமிகுந் துள்ள நீ
யாதரித் தாளுவா யருணைமா ரமணனே. 1

ஆதியா யந்தமா யாதியந் தமுமிலாச்
சோதியாய் சுத்தமாய் சுகுணவா ரிதியதாய்
நீதியாய் நிமலமாய் நிற்குமோர் மூர்த்தியே
ஆதவன் றவழுமோ ரருணைமா ரமணனே. 2

மேருநேர் மாலதாய் வேலன்வாழ் குன்றமாய்
நீருமாய் தீயுமாய் நேமிசூழ் வாயுவாய்
பாருமாய் விண்ணுமாய் பதியுமாம் பரமனே
யாரும்வந் தனையுநல் லருணைமா ரமணனே. 3

இருளதா யொளியதா யிரவியாய்ப் பிறையுமாய்
இருநிலந் தோன்றிடு மெண்ணிலா வுயிர்களாய்
ஒருமையாய் பன்மையா யொன்றுமற் றுப்ந்திடற்
கருமையா யொளிருநல் லருணைமா ரமணனே. 4

சாத்திரங் கற்றுமென் சாதனை செய்துமென்
சூத்திரம் பார்த்துமென் சூழ்வினை நீங்குமோ
தோத்திரஞ் செய்துனை தொல்வினை போக்கவே
யாத்திரந் தெய்ப்பினே னருணைமா ரமணனே. 5

விண்டுவுந் தேவரும் வேதனுந் தேடியுங்
கண்டிலை யென்னவிக் கடையனு லாகுமோ
தொண்டுசெய் காலலோ தோன்றுவா யென்றுனை
யண்டினே னுறைவா யருணைமா ரமணனே. 6

அங்கைமான் மழுவுநீ ளரவமோ டென்புதன்
கங்கையுந் திங்களுங் கரியுரிதா னணி
சங்கரற் கன்றருள் தந்தசீர் கந்தவே
ளங்கிச மாய்த்திக ழருணைமா ரமணனே. 7

ஆலமன் றுண்டவா அமரரைக் காத்தவா
காலனைக்கண் டதுங் காலினாற் சாய்த்தவா
ஞாலநன் கேத்துமெய் ஞானியாய் வந்தவா
ஆலிநீ ழல்வள ரருணைமா ரமணனே. 8

நமசிவா யவெனுமந் நாமமாட் சிமையையும்
நமசிவா யவெனுநன் னூலினோர் பெற்றியும்
நமசிவா யன்றனை நாடுநீ யோதியந்
நமசிவன் னட்பரு ளருணைமா ரமணனே. 9

அல்லுமாப் பகலுமா யமையுமென் னையனே
புல்லனென் பிழைகளைப் போக்குநற் கருணையைத்
தொல்லையூழ் வினையெலாந் தொலையுமா றுதவியென்
னல்லலைத் தீர்த்தரு ளருணைமா ரமணனே. 10

தஞ்சமென் றிங்குனைச் சார்பினைக் கைவிடே
ஊஞ்சலைப் போலலைந் தாழினு மையகோ
சஞ்சலந் தாங்கிடே சன்முறைச் செவியிலேற்
றஞ்சலென் றிந்தரு ளருணைமா ரமணனே. 11

---

## திருநேரிசைப் பதிகம்.

திருவரு ணெறியில் வாழுந் தெய்வமே யுலகமுய்ய
வருமொரு கருவிற் றோன்றி வளருமுன் பாதம் நாடி
மருவரு மன்பி யற்று மானாடி யவரை யாளுங்
குருபர வெனையு மிக்காட் கொள்ளுவாய் ரமணதேவே. 1

திருவள ரருணைமேவுந் திங்களே பாறு வேமயென்
குருபர னேகற் சாந்த குணநிறை திருவே போதந்
தருவென வுலகிற் றோன்றித் தழைத்திடு மறிவே பற்று
மிருவினை நீக்கி யாளென் னேந்தலே ரமண தேவே. 2

பொறியுயர் பெரிய ருந்தன் பொன்னடி வழுத்தி நாளும்
பிறிவற நின்று தத்தம் பிறவிநோ யகல வெண்ணி
நெறிமிகு மரிய நோன்பி னின்றன செனிலிவ் வேழை
யறிவிலி யென்செய் தாய்வே னருணைவாழ் ரமண தேவே. 3

சந்தத முனது தொண்டர் சாமிநின் னடியி னன்பைச்
சிந்தையி லாழ வைத்துச் சிற்பர வடிவ மானார்
தொந்தமாம் வினையி லாழுந் தொழும்பனை யும்பு ரப்பாய்
சந்தமா ரருணைவாழுஞ் சற்குரு ரமணதேவே. 4

பொய்யிலா மறைகளோதும் பொருளுணர்ந் தனைத்து மாய்ந்து
பொய்யிது மெய்யிதென்று பொருந்துமென் னறிவாற் றேர்ந்து
பொய்யுல குறவ கன்றுன் புனிதவாழ் வெய்த லென்றோ
பொய்யறி யாத ஞானப் பூரண ரமண தேவே. 5

அய்யனே பவங்க ணீங்கி யறிவுறிந் தில்லே னின்னும்
மெய்யனே யெனக்கு மிக்க மெய்ப்பொரு டருமு தாகக்
கையனே கடையனென்னைக் கைவிடிற் கதிவே றில்லை
யுய்யவோர் மார்க்க மெற்கிங் கோதுவாய் ரமணதேவே. 6

தங்கிய வினைகண் மீறித் தனையறி புணர்விழுந்து
பங்கமி லருளி லாது பாதவித் திடுமிவ் வேழை
பொங்குமுன் கருணை யாழிப் புகுத்துநல் லின்பமேவத்
துங்கமார் பதஞ்சி ரத்திற் சூட்டுவாய் ரமண தேவே. 7

வஞ்சமா ருளத்தி னாலே வருந்திவெவ் விளைக ளீட்டி
பஞ்சமா பாதகத்தைப் பண்ணுமென் போலார் மண்ணிற்
கொஞ்சமுங் குணமிலாவிக் கொடியனின் னருளை நாடித்
தஞ்சமென் றேன ருள்வாய் தாதையே ரமணதேவே. 8

அன்பருண் மிக்க ளைந்த வருமறை முடிவே போற்றி
துன்பகன் றின்ப மெய்திக் துலங்கிடு மமலா போற்றி
மன்பதை களைத்தி ருத்து மருவிலா ரியனே போற்றி
நின்பதம் வழுத்து மெற்கோர் நிலையருள் ரமணா போற்றி. 9

அந்தணா போற்றி போற்றி அருந்தவ முனியே போற்றி
பந்தமில் பரமே போற்றி பார்புக ழரசே போற்றி
எந்தையே குருவே போற்றி யெழின்மிகு ரமணா போற்றி
சொந்தமா யென்னையாட் கொண்ட சொரூபமே போற்றி போற்றி. 10

---

## ஸ்ரீரமண வெழுமணித் திருப்புகழ்.

---

தந்த னாதன தானாத னாதன
தந்த னாதன தானாத னாதன
தந்த னாதன தானாத னாதன தனதான

அந்த ணாகுரு தேவாத மோகம
எந்தை யேமுனி கோவேத மோகம
அந்தர் யாமி நாவேத மோகம வெகுவாக

அந்த மோச ராக மோகம
சுந்த ராருணா கிராக மோகம
அண்ட ரோதமு நாராக மோகம விருளாரும்

பந்த பாசவி நாசாத மோகம
சொந்த ஞானவி காசாத மோகம
பண்பு லாமுரு கேசாத மோகம மனநாடு

பஞ்ச கோசவ தீதார மோகம
செஞ்சொ லாரு ணிதார மோகம
பஞ்ச பூதச மேதார மோகம வருணிட

வந்த தூமலை வாசார மோகம
அன்பர் மேல்விசு வாசார மோகம
வஞ்ச னூறிய நேசார மோகம வடியாரென்

வண்டு சூழ்திரு பூவேர மோகம
கண்டு தேனொடு பாகேர மோகம
வம்ப லாதவர் தேவேர மோகம மிகுதூய

சிந்தை வாழருள் தாதார மோகம
விந்தை மேவுவி நோதார மோகம
செம்பொ னேரிகர் பாதார மோகம வொளிவிசு

திங்கள் சூடிய தேவே சனாதன
துங்க சோணையில் வாழோர்த போதனர்
சிம்பு ளோரம ஞானசீலர்கள் பெருமானே.

---

தனந்த தானந் தனதன தனதன தனதான.

குருந்த வேரின் றனதடி யிடைகுரு வடிவாகி
குளிர்ந்த மோனம் பெறவரு ளியமுன தருணடி

பரந்த வேதந் தமிழினி லருளிய குருவோனே
பணிந்த நானுன் றிருவடி பெறவருள் புரிவாயே

*சுரந்த பாலுண் டுயமுலை தருமுமை பெறுபாலா
துலங்கு ஞானங் கெடுமம ணரையழி மடல்வீரா

இரந்த பேர்தங் குறையக லருணையி லுறைவோனே
யிணைந்த பேரின் புதவுர மணமுனி பெருமானே. 2

---

* உமாமஹேஸ்வரியின் திருமுலைப்பாலுண்டு அமணரை வென்ற ஸ்ரீசம்பந்த மூர்த்திஸ்வாமியின் அம்சமெனப் பொருள் கொள்க.

தான தனதன தான தனதன
தான தனதன தனதான.

சாதுவென புவி மீதிலுள பல
சாதியருமுனை தொழுதேநின்
சாசு வதநிலை மேவினர்களெனா
சாமி நினதருள் பெருமாறு

நீதி நெறியுமி யாத வெளியன
நீதி வழிமரு விடுபேயன்
நீசமுறுமன தாச கலவுயர்
நேயமிக வெனை யருள்வாயே

தாதை தனையரை யாத ரவினெடு
தாவி யுனைவருள் வதுபோலும்
சாடு திருடரை மேவி யருள்கொடு
தானெ ரொளியையு தவிமேலும்

சாத மொடுகுடி நீரு மருளிய
தாச ருளமுறை குருநாதா
சாமி ரமணவு தார வருணை
சாரு முயர் தெருள் பெருமானே. 3

---

தனன தனத்த தனன தனத்த
தனன தனத்த தனதான.

குருந்தா யிடத்தொர் மகனு யுதித்தி
வுலகா சைபற்றி யலேவோனு
யுயர்வி டுமிக்க நிலமோ டுமக்க
ளொளாவிவி சருத்த மனைமீதே

பெருமோ கமுற்று வளர்ஞா னமற்று
பிழையே யியற்றி மடமாதர்
பிணிசேர் முயக்கின் மனமே பரிக்கு
பிணையா தகற்றி யருள்வாயே

கிரிமா துபத்தை விழியா லெரித்த
திருவா ளர்பெற்ற குமரேசா

திகழா ரணற்கு மருகா புவிக்கு
தெளிவே யளிக்கு முருவாகி

அருணா சலத்தொர் குருவா கிபத்த
ரறிவே துலக்கு மமனோகின்
அடியே வழுத்து நடரா சனுக்கு
ளகமாய் நிலைத்த பெருமானே. 4

---

தானதன தானதந்த தானதன தானதந்த
தானதன, தானதந்த தனதான.

ஆதிகுரு வாகிவந்த ஞானாம ணுவிரிந்த
வாழியது போலுமுந்தும் விளையாலே
ஆதிகுடி யாகிவந்த ஆனுடல்க டோறுமிங்கெ
ணுருயிர்கொ டைதொழிந்து நிலைகாண

நீதியுரு வாயமைந்த நேமமதி லேபிறந்த
நேர்மைமிக வேநிறைந்த வழியாலே
நீடுதெளி வேயடைந்து நேருமுளை யேபகலிந்து
நேயமிக நாளியங்க வருள்வாயே

வேதியர்க ளோதுமின்ப வேதமதை யேவனைந்து
வேதமுடி வாயிருந்து பிரியாத
வேதமறி யாதுமந்த வேதமுழு தாயடர்ந்த
வேதபொரு ளாய்விளங்கு பொருளாகி

வேதநெறி மேவுசுந்த ராரியன லோகைமிஞ்ச
வேதகுல னுயவன்றன் மகனாகி
வேதவித ரேநிறைந்த தோாருளை வாழவந்த
வேலனுரு வாய்பிறந்த பெருமானே. 5

---

தந்த தன தந்த தந்த தனதான.

பந்தமுழு துங்குவிந்தொர் வடிவான
பைம்பகமெ னங்கின் சிந்தை மிகவாகி

யெந்தை நினை தன்பிழந்த    வெளியேனல்
லின்பமதி யங்கவென்று    மருள்வாயே

தந்தையும்வ னங்கவன்ருேர்    சொலைநாடி
தந்துபுகழ் மிஞ்சநின்ற    குகர்கூருய்

வந்துணர்வை யுங்குகந்து    தருதூய்த
வந்தினமு யன்றிடென்ப    மணதேவே. 6

---

தந்தனந் தனந்ததான தந்தனந் தனந்ததான
தந்தனந் தனந்ததான    தனதான.

சந்தைவந் திருந்திரு கும்பலென் றடர்ந்துபிழை
தந்திடும் பழந்தையாதி    யுறவோரென்
சங்கமும் பரந்தபூமி செம்பொன்வன் டடைந்துபாடு
சஞ்சுமம் பெதும்பை வாழ்வு    நிலையாக

சந்ததம் பரிந்தவாசி யெங்கணுந் திரிந்துலாவி
தன்பதம் பிரிந்தபேதை    மதியேனும்
தந்தமுந் தளர்ந்துகாது கண்களுங் குறைந்துபோமுன்
சஞ்சலந் தவிர்ந்துவாழ    வருள்வாயே

அந்தரந் தெரிந்துமாறு சிந்தையுந் திருந்திடே
வன்புடன் புகன்றவேவரி    வுருவோனே
அம்பதம் பணிந்தநேயர் வெம்பவஞ் சிதைந்துநாளு
மம்பரந் தெரிந்துமேவ    அருள்வோனே

பந்தரைந் திலங்குமிலர் செஞ்சொல்கொண் டுகந்துபாத
பங்கயந் தருந்தபாள    குணதேவே
பங்கயன் கடம்பன்மாமன் பண்டனம் புரிந்தசோணை
பண்புடன் றுலங்குமார    மணதேவே. 7

---

ஓ
குருவே துணை.

# ஸ்ரீரமண தசாசக் கீர்த்தனைகள்.

'தோலினே சேஸின" என்கிற கீர்த்தனைமெட்டு.

## 1. இராகம்—சுத்தபங்களா தாளம்—ஆதி.

### பல்லவி.

அருணை வாழ்குரு தேவா சரணம்
கருணைசெய் வாயே கடவுளே. (அ)

### அநுபல்லவி.

இருண்மன மொழிந்தே எழிலொளி நிறைந்தே
இருவினை யிடைந்துநின் சீர்பெறவே. !அ)

### சரணம்.

கதிவே றிலையே கடவுளு னையிட
பதியே தயையுடன் பரிந்தெனை யேற்பாய்
நிதமே நினைகடி நிலையென நாடி
துதிகட ராஜனை துன்பறக் காத்தருள். (அ)

---

"சுஜன ஜீவனு" என்ற கீர்த்தனை மெட்டு.

## 2. இராகம்-கமாசு தாளம்—ஆதி.

### பல்லவி.

அரிய ஞானமே நீயுந் துலங்க மோனமே (சாமி)

### அநுபல்லவி.

அரிய வேதமே போற்று மமல போதமே
தெரியாத மலமும் நீக்கத் தெளிந்து போற்றினேன் (சாமி)

சரணம்.

ஆதியேய ஞானியோ — கானந்த தேவே
சோதி சொரூப சுகதெய்வ — சுபகா வானே
சோதி யாமலே யென்னை — சுத்த ஞக்கவே
நீதி லென் குரு ரமணவுனை த்யான மேபு ரிந்திநன். (ஆதி)

"நகு மோமு" என்ற கீர்த்தனை மெட்டு.

3, இராகம்-ஆபேரி தாளம்-ஆதி.

பல்லவி.

ரமண நின் காருண்டும் — நாயேனை யினிநு
ரட்சிப்பாய் நாதா நின் — ஸ்ரீ பதங் கொடுத்தே (ரம)

அநுபல்லவி.

சமணனைக் கழுவேற்றும் — சம்பந்த னென்ற
அமலா அருணா — லருணை நகர் மீதே
குருவாய் வந் — தொளிர் ஸ்ரீ (ரம)

சரணம்.

இமை நேர மோயா மலே — வெளியாமன விருளாய்ந்தே
தமையே நானனுக — அமைவேபெறு மனமாகவும்
நமதா தர்க ளனுகாமலும் — நவில்வாய் வழி நலமுடனே
அமரா தியரேத் தருண சலமீதே ஆஸ்ரமத்தில் வாழ் ஸ்ரீ (ரம)

"ஏமனி போகடுதே" என்ற கீர்த்தனை மெட்டு.

4, இராகம்-தோடி தாளம்-ஆதி.

பல்லவி.

பாதமே கதியென்று — பக்தன் வந் தேனின்று
பாமகுரு ரமணா — பாலிப்பாய் மெய்ப் போதமே (பா)

அநுபல்லவி.

சாதுக்கள் மனாலயம் சாமிநீ விற்றிருப்பாய்
நீதுபல செய்யுமென் நிமனம்வக் தாள்வ தென்றோ (பா)

சரணம்.

ஈனரைக் காப்பாற்றிட திருவருணை மேவிய
ஞானகுருவே யுனை நாளுமே வணங்கினேன்
காலனணு காமலே காத்துரட்சிப்பா யென்னை
பாலன் நடராஜனும் பாடியேநின் றூடியே (பா)

---

"கலிலோ" என்ற கீர்த்தனை மெட்டு.

## 5. இராகம்-காபி தாளம்-ஆதி.

பல்லவி.

கண்டால் குரு ரமணைபொன் னடிகள்
கதிபெற லாந்தினமே மடமனமே (க)

அநுபல்லவி.

பண்டே சன காதியர் பதமுறப்
பண்புடன் குருவானான் பட்சமுடனே (க)

சரணம்.

விண்டோனா மெனனதெனு மிரண்டையும்
விமலனரி னடிகளையே விடாதுபற்றி
தொண்டேபல செய்தவன் புண்ணபெற
தொல்வினை யகன்றிடுமே சுத்தமுடனே (க)
தேடியான் கண்டே னருணையில்
தேறாத லொன்றுடைய தேசிகனடி
பாடினேன் பவமகன் றேப்புய
பண்புடன் நடராசன் பரிவுடனே (க)

---

" தந்தைதாயிருந்தால் " என்ற கீர்த்தனை மெட்டு,

## 6, இராகம்—சஹாநா தாளம்—ரூபகம்.

பல்லவி.

எந்தை நின் திருவடி யெய்தும்நா ளெந்நாளோ
ஏழைநா னென்செய்வே னெவ்வாறுய் வேன் சாமி (எ)

அநுபல்லவி.

பந்தவ லையிற்பட்டு பாவத்தொ ழிலைத்தொட்டு
பதியே நின் னருள்விட்ட பாவியா னீடேற (வெ)

சரணம்.

நீரிற்கு மிழியொத்த நிலையில்லா தசடத்தை
நித்தியமென வெண்ணி நின்னை மறந்துமிகப்
பூரித்து ளமகிழ்ந்தேன் பொய்யே யென்றுணராது
புண்ணியா வுன்பதத்தே பொருந்தியென்றும் வாழவே
(எந்தை)

அந்தக்க ரணங்களால் அடிமையான் படும்பாடு
அய்யே யித்தனையென்று அளவிட முடியாதே
சிந்தை யவிழ வுன்றன் சேயாம் நடராஜனுன்
சின்முத்தி ரையில் நின்று சிரெய்திட ரமண (வெ)

---

" மருகேலரா " என்ற கீர்த்தனை மெட்டு.

## 7. இராகம்—ஜெயந்த ஸ்ரீ தாளம்—ஆதி

பல்லவி.

குரு நாதனே ஸ்ரீ தேவனே

அநுபல்லவி.

குருநாத னேநின் சிறுசேய்ந டேசன்
இருளிங்க வேநின் றருள்வாய் சதா (குரு)

சரணம்.

பசிதிரவுண்டு பாவை மோகங் கொண்டு
பவமே திரண்டு பரமனுன்னை விண்டேன்
கசிந்தே வருநின் கருணா மிர்தத்தாற்
கடையேனின்பெய்த க்ருபைசெய் ரமண (குரு)

---

" ராமநீ சமான " என்ற கீர்த்தனை மெட்டு.

## 8. இராகம்-கரகரப்ரியா தாளம்-ரூபகம்.

பல்லவி.

சாமி சமனா னேவு னடிகள்
சத மென்றே நாடி னேனருள் (சா)

அநுபல்லவி.

கோமா வுனை நம்பிய வெனை
கொண்டருளுமென் குறைகடிருத்தி (சா)

சரணம்.

நினைவந் தடைந்த வினை யேனும்
நிதமுன் பாத நேயங் கொண்டு
நிலைவொழிந்த நன் னிதனுக
நிகரில் மாதவ பகரு வாய் வழி (சா)

---

## 9. இராகம்-காம்போதி தாளம்-ரூபகம்.

பல்லவி.

இன்னமுங் க்ருபை செய்யாதேனோ
என்ன செய்வே னேழை சாமி (இன்)

அனுபல்லவி.

பன்னரும் மறைகளுன்னை
பகருதே தயாபரனென (இன்)

சரணம்.

பொல்லாத வொர் பாவியோ நான்
பொறுப்பாய் பிழைக ளெல்லாம்
நில்லாத யிம் மாய வாழ்க்கை
நீங்கி யானு நின்னில் வாழ (இன்)
பரிவாக வென் பந்தம் நீங்க
பாராய் கடைக் கண்ணால் கொஞ்சம்
சிறியேன் நட ராஜன் முறை
சிந்தை செய் வாய்ரமணா (இன்)

“மன்றுளாடியவா” என்ற கீர்த்தனை மெட்டு.

## 10. இராகம்—தேசிகதோடி தாளம்—ஆதி.

பல்லவி.

கெஞ்சி னேனருள்வாய் சாமி கெஞ்சி னேனருள்வாய்
தஞ்ச மென்ற டைந்த வென்றன்
சஞ்ச லங்க ளைத்த விர்க்க (கெ)

அனுபல்லவி.

சஞ்சி தாகாம் யங்க ளழியவுஞ்
சாருமீடணை மூன்றுங் கழிபவும்
பஞ்சேந் திரியசேட் டைக ளொழிபவும்
பக்தனாய் நின்னடி போற்றவும்
முக்தனே நின்புகழ் சாற்றவும் (கெ)

வஞ்சனை பொய் சூது பொறாமையும்
வந்திடு மிரு மூன்றும தங்களும்
மிஞ்சியே யெழுங் கொடிய சிற்றமு
மீரிரு கரணமு மற்றும்
வேருட னகற்றிட முற்றும் (கெ)

பஞ்சு போலென்பந் தங்கள் பறந்திட
பகரொ ணாஞானக் கண்டி றந்திட
நஞ்சுண்ட நாதவு னருள்சு ரந்திட
நவிலரு ரமணாநின் பதமுற
சுவையுறு வானமு தம்பெற (கெ)

பஞ்சகோ சக்கு கையுண் மயங்குமென்
பன்னு மான்மஸ்வ ரூபமி லங்கவென்
சஞ்ச லாதிப்பி றவிப்பி ணியுமென்
சடபா வங்களு மறந்திட
கடரு ஜன்மநிலை பொருந்திட. (கெ)

———

# மங்களம்.

இராகம்—சௌராஷ்டம் தாளம்—ஆதி.

பல்லவி.

வேதாந்த மாய்விளங்கும் விமலனுக்கு மங்களம்.

அனுபல்லவி.

நாதாந்த நாதனுக்கும்
நால்வரையாட் கொண்டவற்கும் (வே)

போதாந்த புண்ணியர்க்கும்
புனிதன் சங்க ரன்பொ னடிக்கும் (வே)

அரிய வேதம் அறைப வர்க்கும்
அண்ணா மலைவா ரனருளுக்கும் (வே)

திருவருணை யுறையும் ரமணன்
திவ்ய பாதந் தேடு வோர்க்கும் (வே)

---

# நூற்பயன்.

வெண்பா

சிரமணன் றன்றோத் திரமஞ் சரியதனை
நாசமுடன் சொல்வோர் நவையற்றும் —மாரமணன்
றண்ணருளால் வாழ்வர் தமக்குவமை யற்றென்று
மெண்ணரிய வீட்டிற் கிடைத்து.

---

# வாழ்த்து.

---

### வெண்பா.

*அருமறைகள் வாழ்கவுய ரந்தணர்கள் வாழ்க*
*மருவொடுநற் சோணைநகர் வாழ்க—வருமடியார்*
*நீங்கற் றுய்யச்செய் திருரமணன் றாள்வாழ்க*
*நாங்குற் றுவாழ்கவிந் நூல்.*

---

## ஸ்ரீரமண ஸ்தோத்திர மஞ்சரி முற்றுப்பெற்றது.

---

ஸ்ரீ ரமண பகவான் சேவடி வாழ்க.




---

Printed at The Hanuman Printing Works, Villupuram.

# பிழை திருத்தம்.

| நெ. | பக்கத்தின் நம்பர். | வரியின் நம்பர். | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| 1 | 1 | 6 | முட்ம்பினு | முடம்பினு |
| 2 | 10 | 5 | வாயவாய் | வாய்ப்பதிச் |
| 3 | 12 | 25 | சுடரொள்ியாய்ச் | சுடரொளியாய்த் |
| 4 | 14 | 9 | கண்டேநின் | கண்டேனின் |
| 5 | 17 | 5 | பரகே | பாகே |
| 6 | 18 | 11 | கத்தரற் | கத்தாற் |
| 7 | 22 | 3 | துஞ்சவிலா | துஞ்சவிலா |
| 8 | 24 | 1 | நினைவுள்ளுர் | நினைவுள்ளோர் |
| 9 | 25 | 20 | நிததியனே | நீத்தியனே |
| 10 | 29 | 2 | வுலக | யுலக |
| 11 | 37 | 12 | ரமணபொன் | ரமணன்பொ |
| 12 | 40 | 25 | சஞ்ச லா திப்பி | சஞ்சலஞ் சேர்பி |



# விளம்பரம்.

---

ஸ்ரீரமண ஸ்தோத்திரமஞ்சரி
இரண்டாம்பதிப்பு விலை ரூ. 0-5-0
ஸ்ரீரமண ஞானமணிமாலை ரூ. 0-2-0

---

விலாசம்:—

ஸ்ரீரமணீயவாணி புத்தகாலயம்,

திருவண்ணாமலை.